


உ
சிவமயம்

# உழவாரம்

சமய இலக்கியத்திங்கள் இதழ்

மலர் 14 ] ஜுன் 1999 [ இதழ் 12


பெருமைதரு ஆசிரியர், ''திருமுறைக்காவலர்''
M. கண்ணப்ப செட்டியார்
(நிருவாக இயக்குநர், ஸ்ரீ மங்கையர்க்கரசி ஆலை)



மாணிக்கவாசகர்



# தமிழக முதல்வர்

## டாக்டர் கலைஞர் வாழ்க பல்லாண்டு!



தமிழ்நாட்டின் முதல்வராக விளங்கி, சமயசமுதாய நல்லிணக்கம் கண்டுவரும் ஒப்பற்ற இயக்கத் தலைவர் டாக்டர் கலைஞர் மாண்புமிகு மு. கருணாநிதி அவர்கள் தமது எழுபத்தாறாவதுபிறந்த நாள் விழாவைக் கண்டுள்ளார். சீர்மிகுதிருக்குவளைப் பிள்ளையாகத் தோன்றி, விழாவொலி மிகு திருவாரூர் நல்லிளைஞராக வளர்ந்து, தமிழகம் முழுதும் போற்றும் தானைத் தலைவராக மலர்ந்து, இன்று இந்தியப் பெருநாடு கொண்டாடும் முதிர்ந்த அரசியல் அறிஞராகக் கனிந்துள்ளார்.

இவருடைய நல்லாட்சியில் இன்று பல்வேறு துறைகள் முதன்மையுற்றுவருகின்றன. மக்கள் முன்னேற்றமே தமது உயிர்மூச்சு எனக்கொண்டு அதற்குரிய செயல்களில் தளராத உழைப்பைக் காட்டி வருவது இளைஞர்சமுதாயத்திற்கோர் படிப்பினை. எதற்கும் தளராத உள்ளம்; எதிரிகளும் போற்றும் மதிவன்மை; எவர் சொன்னதாக இருந்தாலும் நல்லவைகளை நாடி ஏற்றுப்போற்றும் இனிய இயல்புகள்; தன்னைப்போலவே இசைந்து, இணைந்து உள்ளவர்களை முழுமையாகப்பணிகளில் ஈடுபடுத்தும் தலைமைப் பண்பு; இவற்றைக் கொண்டு இலங்கும் தனிப்பெரும் நாயகராக விளங்குகின்றார் கலைஞர்!

இவருடைய நல்லாட்சியில் தமிழகத் திருக்கோயில்களில் திருப்பணிகள் நிறைவேற்றப்பட்டு வருகின்றன. பாண்டி நாட்டுத் தலைமை அமைச்சராக விளங்கிய மாணிக்கவாசகப் பெருமானின் அவதாரத்தலமான திருவாதவூர்க் கோயிலில் திருப்பணிகள் செய்யப் பெற்று ஜுன் 30-ஆம் தேதி குடமுழுக்கு நிகழவுள்ளது போற்று தற்குரியது.

கலை உணர்வும் மரபுகளைப்பற்றிய பேரறிவும் பெற்றுள்ள தமிழக முதல்வரின் ஆட்சிக் காலத்தில் தமிழகத்திருக்கோயில்கள் மேலும் பொருள்வலிவும் புதுமைப் பொலிவும் பெறுவதற்கு வாய்ப் புகள் உள்ளன.

அவற்றை மாண்புமிகு முதல்வர் அவர்கள் தமது எழுபத் தாறாவது பிறந்தநாள் கொடையாக சைவ சமய மக்களுக்கு வழங் கிடுவார் என்பது 'உழவாரத்தின்' திண்ணமான நம்பிக்கை.

பெரும்புகழ் பெற்று விளங்கும் பேரறிவாளர், முதல்வர், கலை ஞர் பல்லாண்டுகள் நலமுறவாழ்ந்து இந்தியத் திருநாட்டின் மேன் மைக்கு உழைத்திட அங்கயற்கண்ணி உடனமர் செந்தமிழ்ச் சொக்கலிங்கப் பெருமான் திருவடிகளை நெஞ்சார நினைந்து வழி படுகின்றோம்.






1999
ஜூ[illegible]
மலர் 14
இதழ் 12

மதுரைப் பன்னிரு திருமுறை மன்றத் திங்கள் இதழ்

**நமது சிந்தனைக்கு**

**'என்தான் கெட்டது இரங்கிடாய்'**

ஒன்றும் போதா நாயேனை
உய்யக் கொண்ட நின்கருணை
இன்றே இன்றிப் போய்த்தோதான்
ஏழை பங்கா எங்கோவே
குன்றே அனைய குற்றங்கள் குணமா
மென்றே நீ கொண்டால்
என்தான் (கெட்டது) இரங்கிடாய்
எண்தோள் முக்கண் எம்மானே.

—மாணிக்கவாசகர்

ஒன்றுக்கும் உதவாத கடைப்பட்ட என்னை உய்விக்க முன்னமே ஆட்கொண்ட உனது அருள் இப்போது இல்லாமல் போய்விட்டதோ? உமாதேவியைச் சரீரத்தில் கொண்டவனே! எமது இறைவனே! மலைபோன்ற குற்றங்களையும் குணங்களே என்று நீ மனதில் கொண்டு அருளினால் அதனால் உனக்கு என்னதான் கெடுதி வந்துவிடும்? எட்டுத் தோள்களையும் மூன்று கண்களையும் உடைய எனது இறைவனே! எனக்கு இரங்கி அருள வேண்டும்.

---

ஆயிரம் வீண் வார்த்தைகளை விட, கேட்பவருக்கு இதம் அளிக்கும் ஒரு நல்ல வார்த்தை மேலானது. —புத்தர்



# சமுதாயத்தில் செல்வர்கள் பங்கு

(தருமையாதீனம் 26 ஆவது குருமகா சந்நிதானம் ஸ்ரீலஸ்ரீ சண்முகதேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள்)



''தாளாற்றித் தந்த பொருளெல்லாம் தக்கார்க்கு
வேளாண்மை செய்தற் பொருட்டு''

[செல்வம் முயற்சியின் விளைவேயாயினும், அதனை மக்கள் நலத்திற்கும், சமுதாய வளர்ச்சிக்கும், பயன்படுத்துதல் செல்வர்கள் கடமை என்பதனை வலியுறுத்தி, செல்வர்களுக்கும் - அவர்களிடம் பணியாற்றும் தொழிலாளர்களுக்குமிடையே நல்லுறவு ஏற்பட்டுச் சிறக்க வேண்டுவதன் இன்றியமையாமையையும் இக் கட்டுரை விளக்குகிறது].

**ஏற்றத் தாழ்வுகள் ஏன்?**

இந்தியா மிகப் பெரிய நாடு; அதே நேரத்தில் ஏழைமை நிறைந்த நாடாகவும் இருக்கிறது. இங்கே ஏழைமை நிலவக்காரணம் என்ன? சில நாடுகள் செல்வம் கொழிப்பது ஏன்? என்றெல்லாம் நாம் சிந்திக்கவேண்டும். மனிதர்களில் சிலர் செல்வராகவும்-சிலர் ஏழைகளாகவும் இருப்பதற்குக் காரணம் என்ன? இதனைச் சிந்தித்தாலே நாட்டின் நிலைமை நன்கு புரியும். முயற்சியும்-உழைப்பும் திறமையும் உடையவன் செல்வம் பெறுகிறான் முயற்சியின்மையும், திறமையின்மையும், சோம்பலும் உடையவன் ஏழைமையில் வாடுகின்றான். இது பெரும்பான்மை. சிறுபான்மை இந்நிலைக்கு விதிவிலக்காக இருப்பதைக் காணலாம். அதனை மேற்கோளாகக் காட்டுவது நாட்டின் முன்னேற்றத்திற்கு ஏற்றதாகாது. உழைத்தவர்கள் உயர்வதையும் - உழைக்காதவர்கள் தாழ்வதையும் உலகியலில் காண்கின்றோம். செல்வமும் என்றும் ஒரே இடத்தில் நிலை பெற்றிருப்பதில்லை. ''செல்வம், சகடக்கால் போல வரும்'' ''ஆறிடு மேடும் மடுவும் போலாம் செல்வம்'' என்பன ஆன்றோர் வாக்குக்கள்.

---

பேசாத வார்த்தைக்கு நீ எஜமானன். பேசின வார்த்தை உனக்கு எஜமான். —இங்கிலாந்து

**வளர்ச்சிக்கு வழி :**

தனி மனித முயற்சிக்குத் தக்கபடி அவன் வாழ்வு வளம் பெறுவதுபோல - ஒரு சமுதாயத்தின் உழைப்பு - தன்னம்பிக்கை இவற்றின் அளவிற்கேற்ப நாடும் முன்னேற்றமடையும். நாமும் பல முயற்சிகளில் ஈடுபடுகிறோம். ஆனால் முயற்சி சரியாகத்திட்ட மிடப்படுவதில்லை. நல்ல துணிவும் - நல்ல செயலும் முறையான வளர்ச்சிக்கு வழிகோலும் என்பதில் ஐயம் இல்லை. தமது சக்தியை யும் - தாம் மேற்கொள்ளும் செயலின் அளவினையும் சீர்தூக்கித் துணிந்தபின் ஒரு காரியத்தில் ஈடுபடுதல் வேண்டும். இவ்வறிவு இல்லையென்றால் முயற்சி வெற்றி பெறாது. இதனை இரண்டா யிரம் ஆண்டுகளுக்கு முன்னரே திருவள்ளுவர் அறிவுறுத்தியுள்ளார்.

''உடைத்தம் வலியறியார் ஊக்கத்தின் ஊக்கி
இடைக்கண் முரிந்தார் பலர்''

என்ற குறட் கருத்தைச் சீர்தூக்கி முயற்சிகளில் இறங்கவேண்டும். எதிலும் அமைதியான நெஞ்சம் வேண்டும்; அவசரம் கூடாது. இத்தகு நெஞ்சுடைய மக்கள் வாழும் நாடு வளரும்.

**எது நல்ல நாடு?**

வல்லவர்களாக நாம் இருப்பதோடு - நல்லவர்களாகவும் திகழ்தல் வேண்டும்; எந்த நாடு சிறந்தது என்ற கேள்விக்குப்புற நானூற்றில் ஔவையார் ஒரு விடை கூறுகின்றார். அது மேட்டு நிலமாக இருக்கலாம் பள்ளமாக இருக்கலாம்; அல்லது காடாக இருக்கலாம்- நாடாக இருக்கலாம். இவற்றால் ஒரு நாட்டை நல்ல நாடு என்று தீர்மானிப்பது இயலாது; எங்கே முயற்சிக்கு உரிய ஆட வர்கள் நல்லவர்களாக இருக்கின்றார்களோ அங்கேதான் நாடும் நல்ல சிறப்புடையதாகும் என்பது அட்பாட்டின் கருத்தாகும்.

''நாடா கொன்றோ காடா கொன்றோ
அவலா கொன்றோ மிசையா கொன்றோ
எவ்வழி நல்லவர் ஆடவர்
அவ்வழி நல்லை வாழிய நிலனே''

என்ற பாட்டை நாம் சிந்திக்க வேண்டும். நாமும் நல்லவர்களாக இருக்கவேண்டும். நம் பக்கத்திலும் பலர் நல்லவர்களாக இருக்கத் தூண்டவேண்டும். திறன், உழைப்பு, ஊக்கம், நல்லதைச் செய்யும்

---

இனிய சொல்லின் உதவியால் இரும்புக்கதவைக்கூடத் திறந்து விடலாம். —துருக்கி

நாட்டம் உடையவர்களாக மக்கள் இருந்தால் அப்பகுதி வாழும். நமது வல்லமைகளால் நம் நாட்டுக்கு உலகில் சிறப்பில்லை. நாயன் மார்களையும் ஆழ்வார்களையும் பெற்று வளர்த்த பெருமைக்குரிய நாடு நம் நாடு. சமீப காலத்தில் கூட காந்தியடிகளைப் போன்ற நல்லவர்களைப் பெற்று வளர்த்துத்தந்த பெருமை நமது நாட்டுக்கு உண்டு. 'நம் ஊரின் பெருமையால் நமக்குப் பெருமை என்ற நிலை மாறி, நம்மால்-நாம் வாழும் பகுதிக்குப் பெருமை'என்ற நிலை வர வேண்டும். நம்மைப் பொறுத்தவரை, ஆதீனத்தால் நாம் சிறப்படை வதைவிட, நம்மால் ஆதீனத்திற்குப் பெருமை சேர்க்க முடியுமா என்ற எண்ணங் கொள்வதே சிறந்தது.

''நல்லது செய்தல் ஆற்றீராயினும்
அல்லது செய்தல் ஓம்புமின்''

என்ற புறநானூற்றுப் பாடற்கருத்தை உணர்ந்து, நாம் தொடர்பு கொண்டிருக்கும் நிறுவனத்திற்கோ, சமுதாயத்திற்கோ, நம்மைப் பெற்று வளர்த்த நாட்டிற்கோ நாம் பெருமையைத் தேடித்தராவிடி னும் சிறுமையை உண்டாக்காமலாவது இருக்கவேண்டும். இவ்வட்டா ரத்து மக்கள் நன்முயற்சிகளில் ஈடுபட்டுத் தாம் வாழும் பகுதிக்குச் சிறப்புச் சேர்க்கவேண்டும்.

**உழைப்பும் - உரிமையும் :**

நாம் முயன்று உழைக்கவேண்டும். அதே நேரத்தில் மற்ற வர்கள் முயற்சிக்கும் ஒத்துழைப்புத் தருதல் வேண்டும். மற்றவர் களுக்கு உழைப்பை நல்கி உரிய பங்கினையும்-பெருமையையும் நாம் பெறலாம். நமது உடம்பில் உள்ள உறுப்புக்கள்கூட தத்தம் உழைப் புக்கள்கூட தத்தம் உழைப்புக்குத்தகச் சிறப்பிக்கப்படுதலை உற்று நோக்கினால் அறியலாம். கை கால் முதலிய அனைத்து உறுப்புக் களும் அவை அவையும் உழைத்துத் தத்தம் பணிகளைச் செய்து சிறப்புறுகின்றன. அதேபோல இந்நாட்டில் உள்ள மக்கள் அனை வரும் சமுதாயத்திற்கும் நாட்டிற்கும் தம்மால் இயன்ற உழைப்பை ஈந்து பெருமை தேடித்தரவேண்டும். உடலுழைப்பும் வேண்டும்- அறிவு உழைப்பு (மூளை உழைப்பும்) வேண்டும். இரண்டும் இணைந் தால்தான் உயரலாம்.

---

சுவரில் அடித்த ஆணியைப் பிடுங்கமுடியும், இதயத்தில் சொல்லை அடித்தால் எடுக்க முடியாது. --அமெரிக்கா

**சமுதாயச் சுழற்சி :**

இந்த பாலாஜி அட்டைத் தொழிற்சாலை வைத்தியநாதப் பெருமானுக்கு உரிய இந்நிலத்தில் தொடங்கப்பெறுகிறது. இந் நேரத்தில் இறைவனருளைக் கருத்தில் கொள்ளவேண்டும். இறைவனோடு இதற்குத் தொடர்பு உண்டு. உலகத்தில் சும்மா இருந்து உண்டு வளர இறைவன் யாரையும் படைக்கவில்லை. உழைத்து உண்ணவே கைகால் முதலிய உறுப்புக்களை ஈந்து - அவற்றிற்கு ஆற்றல்களையும் வழங்கியுள்ளான். நம்மால் செயல்பட இயலாத பருவத்தில் இறைவன் பூரணமாக உதவுகிறான். குழந்தை தாய் வயிற்றில் இருக்கும்போது உணவு ஊட்டுகின்றான். குழந்தை பிறந்தவுடன் தாய் மடியில் பால் சுரக்கிறதே அதுவும் நியதியாக இறைவனால் ஆக்கப்பட்டதே.

இதனை,

''ஈயறியாப் பூந்தேனே எழுத்தறியா மறைப்பொருளே
காயறியாச் செழுங்கனியே கற்பகத்தின் பசுங்கொழுந்தே
தாயறியாக் கருவில் இருந்து அமுதூட்டும் தாய்த்துணையே
நீ அறியாச் செயல்உண்டோ நிகிலபரம் பரமூர்த்தி''

எனத் திருக்குற்றாலத் தலபுராணம் அழகுற விளக்குகிறது. சிறு குழந்தையாக இருக்கும்போது அதன் தேவைகளை எல்லாம் தாய் நிறைவேற்றுகிறாள். வளர்ந்த பிறகு அதன் பருவத்திற்கு ஏற்ப அக்குழந்தையிடமிருந்தே சிறு சிறு வேலைகளை வாங்கிக் கொண்டு தான் உணவூட்டுகிறாள். இதுபோல நம்மால் இயலாதபோது பிறர் உதவிகளைப்பெற வேண்டும் என்ற எண்ணமும், வளர்ந்து உரம் பெற்ற பின் மற்றவர்களுக்கு உதவ வேண்டும் என்ற எண்ணமும் வளர வேண்டும்.

**செல்வர்கள் கடமை :**

செல்வர்கள் தொழிலில் ஈடுபட்டே செல்வத்தைப் பெருக்க வேண்டும். வட்டிக்குவிட்டுப் பொருள் ஈட்டுவது தொழில்துறைப் பயிற்சி இல்லாதவர்களுக்கும் இயலாதவர்களுக்குமே உரியதாகும். செல்வர்கள் தொழிலில் ஈடுபடுவதால் தொழில் நிறுவனம் இருக்கும் இடத்தைச் சேர்ந்த குடிமக்களும் பக்கத்து ஊர்களில் உள்ள குடிமக்களும் பயனடைவார்கள். தொழில் வளர்ச்சி சிறந்திருக்கு

---

கடவுளை நம்பி எப்பொழுதும் நல்லவற்றை ஆதரித்து வருவதும் மனிதனது கடமைகள் ஆகும். —ஜராதுஷ்டிரர்

மானால் தொழிலாளர்களுக்கு நல்ல ஊதியம் கிடைக்கும் வாய்ப்பு இருக்கும். குடிமக்களும் செல்வவளம்பெறலாம். தொழில் வளர்ச்சிக்கு இடையூறாகவேலை நிறுத்தம் முதலியவற்றில் தொழிலாளர்கள் ஈடுபட்டால், தொழில்துறை பாதிக்கப்படுவதோடு தொழிலாளர்களும் பாதிக்கப்படுவார்கள். ஆகவே தொழிலாளர்கள் தொழில் வளர்ச்சிக்கு உதவித் தாங்களும் பயனடைய வேண்டும்.

**முதலாளி தொழிலாளி பேதம் நீங்க :-**

முதலாளி தன் கடமை உணர்ந்து தொழிலாளிகளுக்குத் தேவையான - உழைப்பிற்கேற்ற வசதிகளைச் செய்துதரல் வேண்டும். அதுபோலத் தொழிலாளியும் நிறுவனத்தின் வளர்ச்சியில் நாட்டம் உடையவர்களாய் ஊதியத்திற்குரிய உழைப்பை நல்கி நிறுவனத்திற்கு நஷ்டம் வராமல் பாதுகாக்க வேண்டும். இந்த எண்ணம் மக்களிடையே செழிக்குமானால் முதலாளி - தொழிலாளி என்ற பேதம் நீங்கி அமைதியான வளர்ச்சி உண்டாகும். நிறுவனத்திற்குத் தீங்கு வருமானால் தொழிலாளி உயிர் கொடுத்தும் காக்க முற்படவேண்டும்

''தன்கடன் அடியேனையும் தாங்குதல்
என்கடன் பணிசெய்து கிடப்பதே''

என்ற அப்பர் வாக்கிற்கிணங்க இருவரும் கடமையை உணர்ந்து செயல்பட்டால் முதலாளி தொழிலாளி போராட்டத்திற்கே வழியேற்படாது

**இருவகை உழைப்பு :**

இந்திய நாட்டின் நிலம் நாட்டு மக்கள் அனைவருக்கும் சொந்தம். உழைப்பும்-திறனும் உடையவர்களிடம் அது உள்ளது, நிலமுடையவர்கள் தம்மை அண்டி வாழும் வறுமை உடையவர்களை சவலைப் பிள்ளைகள் போலக் கருதிப் பாதுகாக்க வேண்டும். உழைப்பு இருவகைப்படும். அறிவால் உழைப்பது ஒன்று. உடலால் உழைப்பது ஒன்று. உடல் உழைப்புக்கு ஓய்வு உண்டு. அறிவு உழைப்புக்கு ஓய்வு இல்லை. நாட்டு வளர்ச்சிக்கு அடிப்படையான தெனபதனால் தான் அதற்கு அதிக ஊதியமும் சிறப்பும் தரப்படுகின்றன. இந்த உண்மையை மக்கள் புரிந்துகொள்வதற்கு நாம் உதவுதல் வேண்டும். விரைந்து செல்லும் வாகனங்களை மூளை உழைப்புடையவர்கள் பயன்படுத்து

---

ஒருவனுடைய உடையை மாற்றலாம். ஆனால் அந்த மனிதனை மாற்ற முடியாது. —சீனா

கிறார்கள். அது ஆடம்பரங்கருதியதல்ல. அவ்வாகனங்களால் சேமிக்கப்படும் கால அளவுகளை மேலும் பயனுள்ளதாக்கவே இவைகள் உபயோகப்படுத்தப்படுகின்றன. இவையெல்லாம் சாதாரண மக்களுக்கு விளங்குவதில்லை. இதனால் பேத உணர்ச்சி வளர்கிறது.

—நன்றி 'திருவருட் செய்தி'

## தலவரலாறு

## திருக்கற்குடி

உய்யக் கொண்டான்மலை. உய்யக் கொண்டான் திருமலை

சோழநாட்டு (தென்கரை] த்தலம்,

தற்போது 'உய்யக் கொண்டான்' மலை என்று வழங்குகிறது. திருச்சிக்குப் பக்கத்தில் உள்ளது திருச்சியிலிருந்து பேருந்து வசதி உள்ளது. இதற்கு 'உய்யக் கொண்டீஸ்வரம்' என்று பெயர்

இறைவன் கல்லில் - மலையில் குடியிருப்பதால் கற்குடி என்னும் பெயர் பெற்றது. நந்திவர்ம பல்லவ மன்னனால் அமைக்கப் பெற்ற கோயில். இப்பகுதிக்கும் 'நந்திவர்ம மங்கலம்' என்னும் பெயருண்டு.

கண்டேயரைக் காப்பாற்றுவதாக உறுதியளித்து இறைவன் அருள் புரிந்ததலம். இவ்வரலாற்று சிற்பம் கோயிலின் வாயில் முகப்பில் மேலே சுதையால் ஆக்கப்பட்டுள்ளது,

கரன் வழிபட்ட தலம், வெளிச்சுற்றில் இச்சிவலிங்கம் 'இடர் ந ர்' என்னும் பெயருடன் திகழ்கின்றது. நாரதர், உபமன்யு முனிவர், மார்க்கண்டேயர், கரன், அருணகிரிநாதர் ஆகியோர் வழிபட்ட தலம்.

இறைவன் — உஜ்ஜீவநாதஸ்வாமி, உச்சிநாதர், முத்தீசர்–
கற்பகநாதர்.

இறைவி—அஞ்சனாக்ஷி (மைவிழியம்மை) பாலாம்பிகை.

தலமரம் —வில்வம்

தீர்த்தம் — (1) பொன்னொளி ஓடை (2) குடமுருட்டி
(3) ஞானவாவி (4) எண்கோண தீர்த்தம்
(5) நாற்கோண தீர்த்தம் என்பன. இவற்றுள்

---

மலருக்கு மணம் எவ்வளவு முக்கியமோ அவ்வளவு முக்கியம் மனிதனுக்குத் தோற்றம். —சார்லஸ்

முதல் 2 தீர்த்தங்கள் வெளியிலும் பின் 3 தீர்த்தங்கள் கோயிலிலும் உள்ளன. (நாற் கோணக் கிணற்று நீரே அபிஷேகம் முதலியனவ களுக்குக் கொண்டு வரப்படுகிறது )

இங்குக் குறிக்கப்படும் 'குடமுருட்டி' என்பது தஞ்சை மாவட்டத்தில் ஓடும் ஆறு ஒன்று. இது வேறு இது சரப்பநதி உய்யக் கொண்டான் நதி என்று சொல்லப்படுகிறது. கல்வெட்டில் இந்நதி, வைரமேகவாய்க்கால் என்று குறிக்கப்படுகின்றது. இது காவிரியின் கால்வாய்களில் ஒன்று. ஞானவாவிக்கு முத்திதீர்த்தம் என்றும் பெயர்.

மூவர் பாடல் பெற்ற சிறப்புடைய தலம்.

கோயில் மலைமேல் உள்ளது. அழகான கற்கோயில் கிழக்கு நோக்கிய முகப்பு வாயில். திருக்குளம் (ஞானவாவி). படிகள் ஏறிச் செல்லும் போது இடப்பால் விநாயகர் உள்ளார். மேலேறிச் சென்றால் செப்புக்கவசமிட்ட கொடிமரம் உள்ளது. அதன் முன்பு -- மார்க்கண்டனைக் காப்பதற்காக - எமனைத்தடுப்பதற்காகக் கருவறை விட்டு நீங்கி வந்து நின்ற, சுவாமியின் - பாதம் உள்ளது. படிகளேறி உட் சென்றால் முதலில் 'அஞ்சனாட்சி' – அம்பாள் சந்நிதி உள்ளது. மேற்கு நோக்கிய சந்நிதி - பழைய அம்பாள். இத்திருமேனியின் திருக்கரத்திலுள்ள பூவின் இதழ் உடைந்துபோய் உள்ளது. இதனால் புதிய அம்பாளை பிரதிஷ்டை செய்துள்ளனர். எனினும் அம்பாள் கனவில் வந்து உணர்த்தியவாறு இப்பழைய அம்பாளை அப்புறப்படுத்தாது அப்படியே வைத்துள்ளனர் இரு அம்பாளுக்கும் நித்திய வழிபாடு நடைபெற்று வருகின்றது. புதிய அம்பாள் சந்நிதி கிழக்கு நோக்கியது. ''பாலாம்பிகை'' சண்முகர் சந்நிதி அழகானது.

உள் நுழைந்ததும் நேரே கோஷ்ட தட்சிணா மூர்த்தி தரிசனம். வலமாக வரும் போது நால்வர் பிரதிஷ்டையும், அம்பாளுடன் காட்சி தரும் விநாயகர் சந்நிதியும், மறுபுறம் வள்ளி தெய்வயானையுடன் சுப்பிரமணியர் சந்நிதியும் உள்ளன கஜலட்சுமி, ஜ்யேஷ்டாதேவி, பைரவர், சூரியன், சனிபகவான் சந்நிதிகளும் உள. கோஷ்ட மூர்த்தங்களாகத் தட்சிணாமூர்த்தியுடன் துர்க்கையும், பிரம்மாவும், அர்த்த நாரீஸ்வரரும் உள்ளனர். நவக்கிரக சந்நிதி உள்ளது.

---

நான்கு மொழிகள் கற்றவன் நான்கு மனிதர்களுக்கு ஈடானவன். — ஐந்தாவது சார்லஸ் மன்னர்

மூலவர்—சுயம்பு—மேற்கு நோக்கிய சந்நிதி — சதுர ஆவுடையார். மூலவர் அழகான தோற்றம், மனம் ஒன்றிச் சிந்திக்க நிறைவு உண்டாகின்றது. மூலவருக்கு நேரே உள்ள மண்டபத்தில் நடராஜா சந்நிதி உள்ளது. பக்கத்தில் பிட்சாடனர், சந்திரசேகரர், வள்ளி தெய்வானையுடன் கூடிய சுப்பிரமணியர், சோமாஸ்கந்தர் முதலிய உற்சவத் திருமேனிகள் அழகாக உள்ளன. இங்குப் பௌர்ணமி விசேஷம். பங்குனியில் பெருவிழா சிறப்பாக நடைபெறுகின்றது. தைப்பூசத்தில் சந்திரசேகரர் சோமரசம்பேட்டைக்கு எழுந்தருளுகின்றார்.

கல்வெட்டில் 'நந்திவர்ம மங்கலம்', 'ராஜாஸ்ரய சதுர்வேதி மங்கலம்' என்று இவ்வூர் குறிக்கப் பெறுகின்றது! சுவாமியின் பெயர் 'உய்யக் கொண்ட நாதர்' எனப்படுகின்றது கி. பி. 18 ஆம் நூற்றாண்டில் நடைபெற்ற கர்நாடகப் போரின் போது இக்கோயில் பிரெஞ்சுக்காரரும் ஆங்கிலேயரும் மைசூர்க்காரரும் மாறிமாறித் தங்கியிருப்பதற்குரிய யுத்த அரணாக விளங்கியது என்ற செய்தியை 'கெஜட்' வாயிலாக அறிகிறோம்.

இத்திருக்கோயில் தருமையாதீனத்தின் ஆளுகைக்குட்பட்டதாகும் இத்தலத்துப்பெருமான் மீது மகாவித்வான் மீனாட்சி சுந்தரம் பிள்ளை அவர்கள் 'கற்குடிமாமலை மாலை'' என்னும் நூலைப்பாடியுள்ளார். இந்நூல் 100 தோத்திரப் பாடல்களை உடையது. 16-3-1962ல் கும்பாபிஷேகம் நடைபெற்றுள்ளது. இத்தலத்திற்குப் பக்கத்தில் 'வயலூர்' முருகன் கோயில் உள்ளது.

---

## பதிகப் பெருவழி—67

### திருக்கற்குடி

திருஞானசம்பந்த சுவாமிகள் அருளியது

திருச்சிற்றம்பலம்

வடம்திகழ் மென்முலையாளைப்
பாகம தாக மதித்துத்
தடம்திரை சேர்புனல் மாதைத்
தாழ்சடை வைத்த சதுரர்

---

நான் கற்றுக்கொடுக்க எண்ணுவது அறிவை அறியும் அறிவையே. —ஆர்னால்டு

இடம் திகழ் முப்புரி நூலர்
துன்பமொடு இன்பம்அது எல்லாம்
கடந்தவர் காதலில் வாழும்
கற்குடி மாமலை யாரே. 1

உயர்வான யாவும் உடைய உமாதேவியைத் தனது உடம்பில் ஒரு பாகத்திலும், நீர் நிலைகளில் சேரும் கங்கை என்னும் மங்கையைச் சடை முடியிலும் வைத்துள்ளவர், எல்லாவற்றிலும் வல்லவராகிய ஈசன். அவர் முப்புரி நூலை அணிந்தவர். ஈசனுக்குத் துன்பம் என்பதும் இல்லை; அவர் இன்பமாகக் கருதுவதும் எதுவும் இல்லை. எல்லாம் கடந்தவராகிய ஈசன் விருப்பத்தோடு கற்குடியில் உள்ள பெருமையான மலையின்கண் வீற்றிருப்பவர்.

அங்கம்ஒரு ஆறுடை வேள்வி
ஆன் அருமறை நான்கும்
பங்கம்இல் பாடலோடு ஆடல்
பாணி பயின்ற படிறர்
சங்கமது ஆர் குற மாதர்
தங்கையில் மைந்தர்கள் தாவிக்
கங்குலின் மாமதி பற்றும்
கற்குடி மாமலை யாரே. 2

அருமையாகப் போற்றப்படுகின்ற வேதமும் அதன் ஆறு அங்கமும், வகுத்தவாறு வேள்வியும், குறை வில்லாத பாடலும், ஆடலும், தாளமும் பயில விளங்குபவர் ஈசன். சங்குகளால் ஆகிய வளையல்களை அணிந்துள்ள குறவர்குல மாதர்களின் கரங்களில் திகழும் மைந்தர்கள், மேகத்தில் இருக்கும் நிலவைத் தொடு-வதற்குத் தாவுகின்றனர். அத்தகைய பெருமைக்குரிய கற்குடி மலையில் ஈசன் வீற்றிருக்கிறார்.

நீர்அக லம்தரு சென்னி
நீடிய மத்தமும் வைத்துத்
தாரகை யின்னொளி சூழ்ந்த
தண்மதி சூடிய சைவர்

---

எந்த வீட்டில் புத்தகசாலை இருக்கிறதோ அந்த வீட்டில் ஆன்மா இருக்கிறது.
—பிளேட்டோ

போர் அகலம்தரு வேடர்
புனத்திடை இட்ட விறகில்
கார் அகி லின்புகை விம்மும்
கற்குடி மாமலை யாரே. 3

பரந்த கங்கை நீரைச் சடையில் கொண்டுள்ள ஈசன். நீளமான ஹமத்தம் மலரைச் சூடியவர். விண்மீனின் ஒளி திகழும் குளிர்ந்த சந்திரனைத் தரித்த சைவர். போர் செய்யும் பாங்குடைய வேடர்கள், மேகத்தைப் போன்று அகிற்புகை எழுப்பிப் பெருமை கொள்ளும் கற்குடி மலையில் அப்பெருமான் வீற்றிருப்பவர்.

ஒருங்குஅளி நீஇறைவா என்று
உம்பர்கள் ஓலம்இடக் கண்டு
இருங் களம் ஆர விடத்தை
இன்னமுது உண்ணிய ஈசர்
மருங்கு அளியார் பிடி வாயில்
வாழ் வெதிரின் முளை வாரிக்
கருங்களி யானை கொடுக்கும்
கற்குடி மாமலை யாரே. 4

உடலும், உள்ளமும் நடுங்குமாறு தோன்றிய கொடிய விடத்தைக் கண்டு அஞ்சிய தேவர்கள். ''இறைவா! நீரே எம்மைக் காத்து அருள்வீராக'' என்று இறைஞ்சி ஓலம் இட, அவ் விடத்தைப் பெருமையான கண்டத்தில் ஆரப் பொருந்த வைத்து உட்கொண்டவர் ஈசர். அவர் அன்பின் மிக்க பெண் யானைகளின் வாயில், மூங்கில்களை உணவாகக் கொடுக்கும் ஆண் யானைகள் நிலவும் கற்குடி மாமலையில் விளங்குபவர்.

போர்மலி திண்சிலை கொண்டு
பூதக ணம்புடை சூழப்
பார்மலி வேடுரு வாகிப்
பண்டு ஒருவர்க்கு அருள் செய்தார்

---

புத்தகம் ஒன்றுதான் அழிவற்ற நிரந்தரமான பொருள்.
—ஆர். சௌதே

ஏர்மலி கேழல் கிளைத்த
இன்னொளி மாமணி எங்கும்
கார்மலி வேடர் குவிக்கும்
கற்குடி மாமலை யாரே. 5

போர்த் தொழில் மிக்க உறுதியான வில்லைக் கரத்தில் கொண்டு பூதகணங்கள் புடை சூழ உலகத்தில் தோற்றம் பெறும் வேடுவ வடிவம் தாங்கி, அர்ச்சுனருக்கு அருள் புரிந்தவர் ஈசர். அழகிய பன்றிகள் பெருகி இருக்க, சிறப்பான மணிகளைக் குவித்துச் செல்வம் பெருக்கும், கரிய நிறமுள்ள வேடர்கள் சூழும் கற்குடி மாமலை அவர் இடமாகும்.

உலந்தவர் என்பு அது அணிந்தே
ஊர்இடு பிச்சையர் ஆகி
விலங்கல்வில் வெங்கன லாலே
மூஎயில் வேவ முனிந்தார்
நலம்தரு சிந்தையர் ஆகி
நாமலி மாலையி னாலே
கலந்தவர் காதலில் வாழும்
கற்குடி மாமலை யாரே. 6

எலும்பு மாலை அணிந்து, கபாலத்தைக் கைக் கொண்டு பிச்சையேற்பவராகி மலையை வில்லாகவும் நெருப்பைக் கணையாகவும் கொண்டுமுப்புரங்களை எரியுமாறு செய்தவர் ஈசன். அவர் நலத்தைக் தரும் பக்திச் சிந்தனையுடையவர்களாய் நாவினால், விரும்பித் தோத்திரப் பாடல்களை அன்பு ததும்பும் நெஞ்சினராய்க் கூறும் அடியவர்கள் வாழும் கற்குடி மாமலையில் வீற்றிருப்பவர்.

மான்இடம் ஆர்தரு கையர்
மாமழு ஆரும் வலத்தர்
ஊனிடை ஆர்தலை யோட்டில்
உண்கல னாக உகந்தார்
தேனிடை ஆர்தரு சந்தின்
திண்சிறை யால்தினை வித்திக்

---

நண்பரைப் போலவே நூல்களும் தேர்த்தெடுத்த சிலவே தேவை.
—ஜயினரியானா

கானிடை வேடர் விளைக்கும்
கற்குடி மாமலை யாரே. 7

ஈசன், மானைக் கையில் கொண்டுள்ளவர். சிறப்பான மழுப்-படையை உடைய வலிமை மிக்கவர்; பிரமகபாலம் ஏந்தி அதனை உணவு கொள்ளும் பாத்திரமாக மகிழ்ந்து ஏற்றவர், தேன் கூடுகள் மிகுந்துள்ள சந்தன மரங்களையுடைய கானில் தினை வித்துக்களை விதைக்க, விளைச்சலைத் தருகின்ற கற்குடி மாமலையில் அப்பெருமான் வீற்றிருக்கின்றார்.

வாள் அமர் வீர நினைந்த
இராவணன் மாமலை யின்கீழ்த்
தோள் அமர் வன்தலை குன்ற
தொல்விரல் ஊன்று துணைவர்
தாள் அமர் வேய் தலை பற்றித்
தாழ்கரி விட்ட விசைபோய்க்
காளமது ஆர்முகில் கீறும்
கற்குடி மாமலை யாரே. 8

வீரத்தின் சிறப்பினைக் காட்டுவதாக நினைத்து மலையைப் பெயர்த்த இராவணனைக் கீழே அழுத்தி, அவன் தோளும் தலையும் குன்றுமாறு விரலை ஊன்றியவர் ஈசர். அப்பெருமான், மூங்கிலின் நுனிப்பகுதியைப் பற்றி இழுத்துப் பின்னர் அதனை விட்டுவிட, அதன் விசையானது வேகமாகச் சென்றுகரிய மேகத்தைக் கிழிக்கும் தன்மையுடைய கற்குடி மலையில் வீற்றிருப்பவர்.

தண்டுஅமர் தாமரை யானும்
தாவிஇம் மண்ணை அளந்து
கொண்டவ னும்மறி வொண்ணாக்
கொள்கையர் வெள்விடை ஊர்வர்
வண்டிசை யாயின பாட
நீடிய வார்பொழில் நீழல்
கண்டு அமர் மாமயில் ஆடும்
கற்குடி மாமலை யாரே. 9

---

இலக்கியச் சுவை அறியாதவன் வாழ்ந்தாலும் இறந்தவன்.
— ஸெனீகா

தண்டு உடைய தாமரை மலரின் மேல் அமர்ந்த பிரமனும், நெடிய வடிவெடுத்து இவ்வுலகத்தை மூவடியாக அளந்து தனதாக்கிக் கொண்ட திருமாலும், அறிய வொண்ணாத குறிப்பில் உள்ளவர் ஈசன். அவர் வெண்மையான இடப வாகனத்தில் ஊர்பவர். அவர், வண்டுகள் இசை பாடவும், நீண்ட பொழிலின் நிழலில் கண்டு இனிது விளங்கும் மயில்கள் ஆடவும் உள்ள கற்குடி மலையில் வீற்றிருப்பவர்.

மூத்துவர் ஆடையி னாரும்
மூசு கடும்பொடி யாரும்
நாத்துவர் பொன்மொழி யார்கள்
நயமில ராமதி வைத்தார்
ஏத்தும யர் பத்தர்கள் சித்தர்
இறைஞ்ச அவர்இடர் எல்லாம்
காத்தவர் காமரு சோலைக்
கற்குடி மாமலை யாரே. 10

முற்றிய காவி உடையை உடைய புறச் சமயத்தினர், நாவானது துவர்ப்பு கொள்ளுமாறு பொய்ம்மொழியை உரைப்பவர் ஆவர். அவர்கள் மென்மை யற்றவர்கள். அவ்வாறு இன்றி ஈசரைப் பக்தி செய்யும் மதி உடையவர்கள், அவரை ஏத்தி உயர்வடைவார்கள். அவர்கள் சித்தர்கள் ஆவர். அத்தகையோரின் இடர் யாவும் தீரும். இவர் ஏத்த விளங்குபவர் கற்குடி மலையில் வீற்றிருப்பவர்.

காமரு வார்பொழில் சூழும்
கற்குடி மாமலை யாரை
நாமரு வண்புகழ்க் காழி
நலந்திகழ் ஞானசம் பந்தன்
பாமரு செந்தமிழ் மாலை
பத்திவை பாடவல் லார்கள்
பூமலி வானவ ரோடும்
பொன்னுல கில்பொலி வாரே. 11

திருச்சிற்றம்பலம்

அணிபெறும் அழகிய நெடிய சோலை சூழும் கற்குடி மலையில் எழுந்தருளியுள்ள பெருமானை, நாவானது மணக்கும் வள்ளன்மையுடைய காழியின் புகழும் தலமும் திகழும் ஞான சம்பந்தர் பாக்களில் சிறந்த செந்தமிழ்ப் பாடல்களைப் பாட, அதனை ஓத வல்லவர்கள் தேவலோகத்தில் சிறந்து விளங்குவார்கள்.



தருமையாதீன ஆன்மார்த்தபூஜாமூர்த்தியாகிய ஸ்ரீ சொக்கநாதப்
பெருமானைச் சிரத்தின் மீது எழுந்தருளச் செய்து கொண்டு
ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்கள் அடியவர்கள்
புடைசூழப் பாதயாத்திரையாக திருக்கோளிலிக்கு
(திருக்குவளை) எழுந்தருளிய

## திருத்தலயாத்திரை நினைவு அருளநுபவங்கள்



வண்டமரும் பூங்குழ்லி உடனாயபி ரமபுரீசுரர்
வளம்நல்கும் திருக்குவளைக் குடமுழுக்கு நிகழ்த்தற்குக்
கண்டவர்கள் பரவியேத்தக் கயிலைமா முனிவர்சிரம்
காறுபாறும் அடியவர்கள் சிரங்களுமே கரைகாணாப்
பண்டுதவம் செய்ததனால் பண்சுமந்த சொக்கலிங்கம்
பார்போற்றும் குருமணியின் சடைமுடியில் கங்கைஎன
ஈண்டெழுந்தே திருத்தருமைப் பதிவிட்டே நம்பெருமான்
இன்பவருள் நல்குதற்கு எழுந்தருளிக் களிப்பீந்தார்!

தலையான்! தாயான்! தழைத்த அன்பினர்
தலைமீ தென்றும் தாபித்த தலைவனைக்
காசிவாசி கயிலை மாமுனி
மாசில் சிரசில் எழுந்தரு ளச்செய-
மயிலாடு துறையரன் ஐயா றப்பர்
பயின்றாடு வழுவூர் பாங்குடன் தொழுதே
கழனிவாயில் கொல்லுமாங்குடியொடு
விழவறாப் பேரளச் சுயம்பு நாதர்
வளாகந் தங்கி மாகா ளத்தல
அளாவும் அருளில் புகலூர் புக்கே
மருகல் மன்னி செங்கா டடைந்தே
பருகா அன்பொடு பயிற்றூர் பரவி
விற்குடி போற்றி விரைந்த அன்பொடு
கற்குடி புரக்கும் கருணை வள்ளல்
குருமண் நண்ணித் திருவா ரூரில்

---

இசை உண்டாக்கும் இன்பம் இல்லாமல் மனிதன் வாழ முடியாது. —கன்பூஷியஸ்

திருவருள் பெற்றே தேவா சிரிய
மண்டபம் 'முன்பே செய்த தவத்தால்'
ஈண்டிய சொக்கர் எழப்பெறச் செய்தார்!

வள்ளல் அரூர் பரவிப் போற்றித்
துள்ளும் அன்பொடு கடாரம் கொண்டான்
கீழ்வே ளூரின் கேடிலி யப்பர்
ஆழ்ந்த அருளை அடியவர்க் கீந்தே
தேவூர் போற்றி சாட்டியக் குடியெனும்
நாலூர் இசைப்பா நாட்டிய தலத்தொடு
குண்டை யூர்க்கிழார் குலவிப் பரவிய
இண்டை சேர்சடை மீனாட் சிசுந்தரர்
இடப புரீசுரர் இணைகழல் போற்றி
கடம்பவனத்தார் கோளிலி எழுந்தார்!

தருமைக் குருமணி இணையடி பரவியும்
அருமையில் எளிய அழகரைச் சுமக்கும்
அடியவர் திருத்தாள் நீர்மலர் கொண்டே
படிமிசை ஊர்தொறும் பூசனை செய்தே
குருமணி திருக்கரம் நீற்றினை வழங்க
பெருமா தவங்கள் 'பெற்றவர்' பெற்றே
தரிசனம் செய்த காட்சியே காட்சி!

பத்து பிப்ரவரி தொண்ணூற்றொன்பது
மொத்த அன்பில் புதன்கி ழமையில்
கோளிலி நாதர் குடமுழுக் கியன்றது!
நாளினி நன்றே என்றே அமைச்சர்
இமிழ்கடல் போற்றும் தமிழ்க் குடிமகனார்
அமிழ்தே தமிழெனும் கலைஞரின் வழிப்படி
குருவொடு மருவி குடமுழுக் கதனை
உடனிருந் தியக்க இனிதே முற்றிட
கடனறி கண்கள் கண்டு தரிசித்தன!

கண்ணிற் சிறந்த நன்மணி என்றே
பண்ணார் மொழியால் பாங்குடன் போற்றும்
காசி வாசி கயிலை மாமுனி
மாசில் ஆவடு துறைமடத் தம்பிரான்

---

அறிஞனுக்கு அனைத்துலகும் தாய் நாடே. —லில்லி

புகலூர் மடபதி பிரமுகர் அடியவர்
பகல்செய் ஒளியில் பத்திமை பொங்க
வழிபடும் குருமணி 'வழிப்படி' நின்றே
கழிவிலா தனைவரும் தரிசனம் செய்தனர்
பூம்பல் லக்கில் பஞ்சமூர்த்திகள்
ஆம்படி எழுந்தே உலாவர லாயினர்!
மீண்டும் தருமையா த்திரை முகிழ்த்தது!!

கைச்சின நாதர் காறா யில்லும்
ஏமப்பேறூர் நமிநந்தி நெய்ப்பேர்
தலங்கள் போற்றி தங்கி வணங்கியே
அத்தன் ஆரூர் மீண்டும் ஈண்டியே
முத்தன் சொக்கர் தேவா சிரிய
மண்டபந் தனில் மீண்டும் எழுந்தார்!
மிண்டிய அடியவர் செய்த தவத்தால்
மாசி சிவராத் திரிநாள் பூசை
ஆசிலாதே நான்கு காலமும் நிகழ
ஆரூர் அடியவர் பாரூர் அன்பர்கள்
சீரூர் சம்பந்தர் காலம் போல்
கண்டே வணங்கிப் பயனும் பெற்றனர்!
ஆரூர் கோளிலி வளாக மண்டபத்
தேரூர் விதிகள் எங்கும் வருகென
குருமணி வாழ்கென எழுதிய வாசகம்
சிலஇவை; குறித்தனன் காண்க!

அவை:-

திருவாதிரை நாளே தீந்தமிழ்த் திருநாள் எனத்
திருநெறிய தமிழினை முற்றோதச்செய்த முனிவரே! வருக!

தண்டமிழ்த் தருமைத் தவநெறிச் சீலரே! வருக!
பண்டைய நன்மரபைப் போற்றிடும் பொன்னடி வாழ்க!

மகேசன் பணியே மக்கட்பணி என்னும்-தருமையாதீன
மகாசந்நிதானத்தை வணங்கி வரவேற்கிறோம்!

தமிழ்ப் பண்பாடே உருவமாய் வந்த
தருமை யாதீனம் வாழ்க! வாழ்க!

அருட்பல்கலைக் கழக அருந்தமிழ்த் தருமைப்
பொருள் சேர் புகழே! போற்றி வணங்குவோம்!

---

புத்திசாலிக்கு ஒரு சொல் போதும். —லத்தீன்

நன்னடைகாட்டும் நற்றமிழ்க் குருவே!
பின்னடையாமல் பைந்தமிழர் வாழ அருள்க!
மூவேந்தர் வழிபுரக்கும் முனிபுங்கவரே வருக! வருக!
பாவேந்தர் நால்வர் பாடற்பயனே! வணக்கம்!
கடவுள்நெறி காட்டும் கடவுள் மாமுனிவரே! வருக!
கடவுள் தமிழ் புரக்கும் கயிலைமாமுனிவரே! வருக!
என்பன போன்ற வாசகப் பொருள்சேர்
புகழ்மொழி அனைத்தும் பொய்யல! மேலும்
புகலிடம் தமிழர் அறியச் செய்ய-
'அறிக்கை' மக்கள் கரங்களில் தவழ்ந்தன!
அறிக்கை 'மதுரைப்பணிமன்றத்தார்'
வழங்கிய செய்தியை நாமும் அறிவோம்;
'தமுங்கருந் தேன் எனத் தமிழர் போற்றுவர்!

தருமையாதீனம் தமிழர்க்கு வழங்கிய நற்செய்திகள் :-

- ☆ மகேசன் பணியே மக்கள் செய்ய வேண்டிய பணியாகும்.
- ☆ வழிபடப்படும் கடவுள் பலராக இருப்பினும் கடவுள் ஒருவரே!
- ☆ ஆதீனங்கள் உயிரை வளர்க்கின்றன!
- ☆ தமிழ் என்றால் இறைவன் என்று பொருள்; சங்கத்தமிழின் முடிவே சைவசிந்தாந்தம்!
- ☆ சீர்திருத்தம் என்பது நெறிதவறும் சமுதாயத்தை நெறியில் நிறுத்துவதே ஆகும்!
- ☆ ''தெய்வம் தெளிமின்! தெளிந்தோர்ப் பேணுமின்!'' என்ற இளங்கோவடிகள் பொன்மொழிப்படி நற்றமிழர் நடக்க வேண்டும்!
- ☆ இலவசம் மனிதனைக் கெடுப்பது; ஊக்கமும் உழைப்புமே மனிதனை வளர்ப்பது.
- ☆ அறிவாலயங்களின் அறிமுகங்கள் அருளாலயங்களை அடையாளம் காட்ட வேண்டும்.
- ☆ அருளாலயங்களாகிய திருக்கோயில்களையும் திருமடங்களையும் பயன் படுத்துவதே வாழ்க்கையாகும்.

—மதுரைக் குருஞானசம்பந்தர் பணிமன்றம்

— தொடரும்

---

பணத்தைப் பயன்படுத்துவதுதான் அதைப் பெற்றிருப்பதன் பயன்

—பிராங்ளின்

## ஆனி மாத அடியவர் வழிபாடு

### அமர்நீதி நாயனார் (19—6—99)

''சிந்தை செய்வது சிவன்கழ லல்லதொன் றில்லார்
அந்தி வண்ணர்த மடியவர்க் கமுது-செய் வித்துக்
கந்தை கீளுடை கோவணங் கருத்தறிந் துதவி
வந்த செல்வத்தின் வளத்தினால் வரும்பயன் கொள்வா

பழயாறையில் தோன்றிய வணிகப் பெருமகன். சிவனடியார்களுக்கு கோவணமும் கீளுடையும் வழங்கும் சிவத்தொண்டு செய்தவர். உறுதியுடன் செய்த இவரது சிவத்தொண்டின் பெருமையை சிவபெருமான் உலகறியச் செய்து ஆனித் திங்கள் பூர நன்னாளில் முத்திப் பேறு அளித்தார்.

### ஏயர்கோன் கலிக்காம நாயனார் (6—7—99)

''அண்ணலா ரடிகண் மறக்கினு நாம
அஞ்செழுத் தறியவெப் பொழுதும்
எண்ணிய நாவே யின்சுவை பெருக
இடையறா தியம்புமென் றிதனைத்
திண்ணிய வுணர்விற் கொள்பவர் மற்றுப்
பற்றிலே னெனச்செழுந் தமிழால்
நண்ணிய வன்பிற் பிணிப்புற நவின்றார்
நமச்சிவா யத்திருப் பதிகம்.

திருப்பெருமங்கலத்தில் பிறந்தவர் கலிக்காமர். சிவபெருமானிடத்து ஆழ்ந்த பக்தியுணர்வுடையவர். திருவாரூர்ப்பெருமான் சுந்தரருக்காகத் தூது சென்றதைப்பொறுத்துக் கொள்ள இயலாத நிலையில் அந்த ''சுந்தரர்'' தன்னைப் பார்க்க வருகிறார் என்ற செய்தி கேட்டு தன்னுயிரை மாய்த்துக் கொண்டவர். கலிக்காமரின் செயலை இறைவன் மன்னித்து அவரை உயிர்ப்பித்து அவரது சிவத்தொண்டு சிறக்க அருள் புரிந்தார். அவர் முத்திப் பேறுபெற்ற நாள் ஆனித் திங்கள் ரேவதி நன்னாளாகும்.

### மாணிக்கவாசகர் (16—7—99)

''எழுதரு மறைகள் தேறா இறைவனை எல்லிற் கங்குற்
பொழுதறு காலத் தென்றும் பூசனை விடாது செய்து
தொழுத கைதலைமீ தேறத் துளும்பு கண்ணீருள் மூழ்கி
அழுதடி அடைந்த அன்பன் அடியவர்க் கடிமை செய்வாம்''

திருவாதவூர் என்ற தலத்தில் அவரித்தவர் திருவாதவூரர், பின்னாளில் இறைவனால் ''மாணிக்கவாசகர்'' என்ற பெயரைப் பெற்றார். தோன்றியது ஆதி சைவ அந்தண குலம். வகித்தது பாண்டிய மன்னனின் அவையில் அமைச்சுப் பதவி. அடைந்தது தில்லையில் தில்லை வாழந்தணர்காண அம்பலவாணனின் திருவடிகள். 'வைகை' நதியில் பெருவெள்ளம் வரச்செய்தது, ஏழை வந்தியம்மைக்காக இறைவன் கூலியாளாக வந்தது, பாண்டிய மன்னன் முன்னிலையில் குதிரைச் சேவகனாக வந்தது, வைகைக் கரையில் பாண்டியன் பிரம்பினால் அடித்ததை தன் முதுகில் வாங்கி, பாண்டிய மன்னன் உள்பட எல்லா ஜீவராசிகளின் முதுகில் படச்செய்தது இவை யாவும் 'மாணிக்கவாசகருக்காக' மதுரை சோமசுந்தரப்பெருமான் செய்த திருவிளையாடல்கள் ஆகும்.

குருபூசைநாள், ஆனித்திங்கள் ''மகம்'' நன்னாள்.

இவ்வடியார்கள் குருபூசை நாட்களில் மதுரை பன்னிருதிரு முறை மன்றத்தார், அ.மி மீனாக்ஷி சுந்தரேசுவரர் திருக்கோயிலில் வழிபாடாற்றி, திருத்தொண்டர் புராணம் திருவாசகம், திருக்கோவையார் முற்றோதல் செய்வர்.

—C.S. சொக்கலிங்கம்

## ஆசிரியருக்கு கடிதம்

எஸ். அம்பலவாணன் ஆய்வாளர் I, இ.ச.அ.ஆ. துறை,
குளித்தலை.

ஐயா, 20-5-99

உழவாரம் ஏப்ரல்,மே இதழில் திருக்கடம்பந்துறை கும்பாபிஷேகம் பற்றி 1966ல் நடந்ததாக குறிப்பிடப்பட்டுள்ளது. தற்போது சென்ற 3-5-98ல் ஷ்டி கும்பாபிஷேகம் மிகச்சிறப்பாக நடைபெற்ற விபரம் விடுபட்டுள்ளது. ஆடல்வல்லான் இருதிருமேனிகள் உள்ளது போன்று சோமாஸ்கந்தரும் இருதிருமேனிகள் உள்ளன. தவிர 6கோல பூஜை நடைபெறுவதும், தைப்பூச திருவிழா மிகச்சிறப்பு வாய்ந்தது என்பதும், காவிரித் தென்கரையில் இரண்டாவதான பாடல்பெற்ற தலம் என்பதும் ''காலைக்கடம்பர் மத்தியானச் சொக்கர் அந்தி ஈய்ங்கோய் நாதர்'' என்ற முதுமொழிக்கேற்ப காலசந்தி மிகச்

அதிர்ஷ்டம் உள்ளவனுக்கு புத்திமதி தேவையில்லை.

—பிரான்ஸ்

சிறப்புடையது என்ற செய்திகளும் விடுபட்டுஉள்ளன. மேலும் திருப்ராய்த்துறை எனது பணி எல்லைக்கு அப்பாற்பட்ட திருத்தலம் என்றாலும் அதைப்பற்றி குறிப்பிட விரும்புகிறேன். திருப்பராய்த்துறையின் குடமுழுக்கு 1940க்கு பின்னர் தற்போது 9-2-1998 ல் தபோவனத்தின் அருட்கொடையால் மிகச்சிறப்பாக நடைபெற்றது. அவர்களின் பெருமுயற்சியால் ஸ்மார்த்தர் ஒருவர் செய்துவந்த பூசை முதலியன சிவாச்சாரியார் ஒருவரை பணியில் அமர்த்தி தற்போது செய்து வருகின்றனர். மேலும் திருவாசகத்தில், ஒரே ஒரு பாடலாக திருப்பராய்த்துறை குறித்து செத்திலாப் பத்து பதிகத்தில் 'வன்பராய்' முருடொக்கும் என் சிந்தை மரக்கண் என் செவி இரும்பினும் வலிது, தென்பராய்துறையாய் சிவலோகா' என்ற பாடல் இன்புறத்தக்கது (அன்பராகிய என்ற பாடல்) இவை செய்தியில் விடுபட்டுவிட்டன. எனினும் தங்களுக்கு தெரிவிக்கவேண்டும் என்ற உந்துதலில் எழுதியுள்ளேன். தங்கள் அருட்பணிகள் வளர்க.

அன்புடன்,

எஸ். அம்பலவாணன்

---

## செய்திகள்

★ மதுரைப் பன்னிரு திருமுறை மன்றத்தில் 20-5-99 அன்று சேக்கிழார் சுவாமிகள் குருபூஜை விழா, பாரத ஸ்டேட் வங்கி முன்னாள் தலைமைக் காசாளர் K. S. பரமசிவம் உபயத்தில் சிறப்பாக நடைபெற்றது. தமிழருச்சனை, திருமுறைவாணர்களின் திருமுறை இசை, குருபூசை வழிபாடுகள் நிகழ்த்தப்பெற்றன. நீடாமங்கலம் N.S. சாமிநாதன் மாகேசுவர பூஜை நிகழ்த்தினார்.

1-6-99 அன்று ஸ்ரீ திருஞானசம்பந்தர், திருநீலநக்கர், முருக நாயனார், திருநீலகண்ட யாழ்ப்பாணர் ஆகியோர் குருபூஜைவிழா மன்றத்தில் நிகழ்ந்தது. மன்றப் புரவலர் திருநெறிய தமிழ்வேள் காரைக்குடி பெரி. பஞ்சநதம் செட்டியார் பொருளுதவினார். மாலையில் திருச்செங்கோடு T.M. சபாபதி ஓதுவார் குழுவினரின் திருமுறை இசையரங்கு நிகழ்ந்தது. புலவர் சு. முத்தையா B.A., B.Ed., மாகேசுவர பூஜை நிகழ்த்தினார்.

★ தமிழகஇந்து சமய அறநிலைய ஆட்சித்துறை சார்பில் மதுரை அருள்மிகு மீனாட்சி சுந்தரேசுவரர் திருக்கோயிலில்

---

அறியாமைதான் துர்ப்பாக்கியத்தின் ஆணிவேர்

— பிளாட்டோ

28-5-99 முதல் 6-6-99 வரை கோடைகால சைவசமயப் பயிற்சி வகுப்புகள் சைவ சமயச் சான்றோர் பெருமக்களால் நிகழ்த்தப்பெற்றன. இவ்வகுப்புகளின் நிறைவு விழா 8-6-99 அன்று மதுரைமாவட்ட ஆட்சித் தலைவர் வீ. தங்கவேலு இ.ஆ.ப. தலைமையில் சிறப்பாக நடைபெற்றது. திருக்கோயில் இணை ஆணையர் போ. இராமராஜு வரவேற்றார். இந்து சமய அறநிலையை ஆட்சித்துறை மதுரை மண்டல இணை ஆணையர் பா. பாஸ்கரன் தொடக்கவுரை ஆற்றினார். திருவாளர்கள் இராம. இராமநாதன், எஸ். பழனிக்குமாரசாமி, பி. தேவேந்திரகுமார், சி.சின்னச்சாமி ச. இராசேந்திரன். ஆகிய அறங்காவலர் குழுவினரும் டாக்டர் சுப. அண்ணாமலை, டாக்டர் மா. வண்ணமுத்து ஆகியோரும் வாழ்த்துரை வழங்கினர். ஆட்சித் தலைவர் பயிற்சி வழங்கிய சான்றோர்களுக்குச் சிறப்புச்செய்து பயிற்சி பெற்றவர்களுக்குச் சான்றிதழ் வழங்கிச் சிறப்பித்தார்.

★ திருக்கயிலாய பரம்பரைத் தருமை ஆதீனம் ஸ்ரீ ஞானாம்பிகை உடனாய ஸ்ரீ ஞானபுரீசுவர சுவாமி திருக்கோயில் பெருவிழா திருநெறிய தெய்வத் தமிழ்மாநாடு 2 -5-99 முதல் 6-6-99 வரை சிறப்பாக நடைபெற்றது. 5-6-99 அன்று மாலை குருமகா சந்நிதானம் ஸ்ரீலஸ்ரீ சண்முகதேசிக ஞான சம்பந்த பாமாசாரிய சுவாமிகள் குருமூர்த்த ஆலய வழிபாடு நிகழ்த்தினார்கள். 6-6-99 அன்று இரவு ஸ்ரீலஸ்ரீ சந்நிதானம் அவர்கள் பட்டினப் பிரவேசமாகச் சிவிகையில் திருவீதிவுலாவும், கொலுக் காட்சியும் நல்கினார்கள். சிவபூசகர்களின் சிவபூசை, திருமுறை இசை நிகழ்ச்சிகள், சொற்பொழிவுகள், கலை நிகழ்ச்சிகள் நிகழ்ந்தன.

★ திருப்பனந்தாள் காசித் திருமடம் 21ஆவது அதிபர் கயிலை மாமுனிவர் திருவளர் திரு காசிவாசி முத்துக்குமாரசுவாமித் தம்பிரான் அவர்கள் திருவுளப்பாங்கின் வண்ணம் ஸ்ரீ ஆதி குமரகுருபர சுவாமிகள் 311ஆவது ஆண்டு மாகேசுவர பூஜைத் திருநாள் 2-6-99 அன்று காசித்திருமடத்தில் நிகழ்ந்தது. காலை சிறப்புரை அரங்கமும், மாலை ஸ்ரீலஸ்ரீ காசிவாசி சுவாமிநாத சுவாமிகள் கல்லூரிப் புலவர் குழுக் கூட்டமும் நிகழ்ந்தன.

★ திருக்கயிலாய பரம்பரை என்னும் ஸ்ரீ கந்தபரம்பரை ஸ்ரீ சிவாக்கிர யோகிகள் ஆதீனம் - சூரியனார் கோயில் ஆதீனக் குரு முதல்வர் ஸ்ரீ சிவாக்கிர யோகிகள் குருபூஜை விழா 19-4-99 அன்று

---

நல்ல மனைவியும், தேக நலனுமே ஒரு மனிதனின் சிறந்த செல்வம்

—புல்லர்

நடைபெற்றது. குருபூசை மலர்களாக 'வரலாற்றில் திருவிடைமருதூர்' மற்றும் 'திருநாவுக்கரசரின் அற்புதங்கள்' ஆகிய நூல்கள் வெளியிடப் பெற்றன. குருமூர்த்த விசேட அபிடேக ஆராதனைகள் திருமுறை இன்னிசை, சமயச் சொற்பொழிவுகள் நிகழ்ந்தன.

★ குன்றக்குடி திருவண்ணாமலை ஆதீனத்துக்குச் சொந்தமான குன்றக்குடி அருள்தரு சண்முகநாதப் பெருமான் திருக்கோயில் விசாக விழா 29-5-99 அன்று சிறப்பாக நடைபெற்றது. காளையார் கோயில் T.N.G. ராஜரத்தினம்பிள்ளை குழுவினரின் நாதசுர இசை, விசேஷ வழிபாடுகள் பட்டிமன்றம் ஆகியன நடைபெற்றன. புலவர் மு. இராச ரத்தினம் பாராட்டுப் பெற்றார்.

★ பன்னிரு திருமுறை மன்ற அன்பர்கள், உழவாரம் புரவலர்கள் திருநெறிய தமிழ்வேள் காரைக்குடி பெரி. பஞ்சநதம் செட்டியார், கயிலைத் திரு. கண்ணப்பன் செட்டியார் ஆகியோர் தலைமையில் வட நாட்டுத் திருத்தல யாத்திரை மேற்கொண்டு, காசி, கங்கோத்ரி, யமுனோத்ரி, கேதார்நாத், பத்ரிநாத் உள்ளிட்ட பல தலங்களையும் தரிசித்துக் கொண்டு 30-5-99 அன்று நலமாக மதுரை திரும்பினர்.

★ வெள்ளகோயில் சைவ சித்தாந்தப் பெருமன்றக் கிளையில் திருஞானசம்பந்த சுவாமிகள் குருபூசைப் பெருவிழா மன்றக்கிளை யின் தலைவர் P.K. குமாரசாமி தலைமையில் நடைபெற்றது. கிளையின் மகளிர் அணியினர் திருமுறை ஓதினர். பொத்தனூர் **S.A.** மணிவாசகம் 'திருமுறையும் தீந்தமிழும் சிறக்க வரு நாயகன்'' என்ற தலைப்பில் சிறப்புரை ஆற்றினார். விழா நிறைவில் அன்னம் பாலிப்பு நடைபெற்றது.

★ சிதம்பரம் - கரந்தை ஜெயகாந்தம் துரைகண்ணு சேக்கிழார் விழா அறக்கட்டளை சார்பில் 19-5-99 அன்று சேக்கிழார் மண்டபம் சேக்கிழார் நூலகம் திறப்பு விழா சிறப்பாக நடைபெற்றது. தருமை ஆதீனம் 26-ஆவது குருமகா சந்நிதானம் ஸ்ரீலஸ்ரீ சண்முக தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள் சேக்கிழார் மண்டபத்தைத் திறந்து வைத்து அருளினார்கள். திருப்பனந்தாள் காசித்திருமட அதிபர் கயிலை மாமுனிவர் திருவளர் திரு முத்துக்குமாரசாமித் தம்பிரான் சுவாமிகள் சேக்கிழார் நூலகத்தைந் தொடங்கி வைத்து அருளாசி

---

அனுபவத்தினால் ஆசை தீர்ந்துவிடுவதில்லை.

—சங்கர சூத்திரம்

வழங்கினார்கள். 20-5-99 அன்று சேக்கிழார் குருபூசை விழா சிறப்பாக நடைபெற்றது. சென்னை உயர்நீதிமன்ற நீதிபதி மாண்பமை K. ஞானப்பிரகாசம் தலைமையில் சிறப்புக் கூட்டம் நடைபெற்றது.

★ மதுரை சக்திவேலம்மாள் நகர் திருவள்ளுவர் மன்றம் சார்பில் கேட்போர் மையம் 22ஆவது சந்திப்பு 15-4-99 அன்று நடைபெற்றது. இருளும் அருளும் என்ற பொருளில் கவிச்சுடர் சு. இலக்குமணசுவாமி சிறப்புரை ஆற்றினார்.

★ தேனி அங்கயற்கண்ணிமாதர்சங்கம் அருள்மிகு பெத்தாட்சி விநாயகர் திருக்கோயிலில் 12-6-99 அன்று 12வது திருவாசக முற்றோதல் பெருவிழாவை நிகழ்த்தியது.

★ தஞ்சை அருள்நெறித் திருக்கூட்டத்தின் சார்பில் சைவ சமயப் பயிற்சி வகுப்பு நிறைவு விழா 14-5-99 அன்று நடைபெற்றது. செயலர் சிவ. திருச்சிற்றம்பலம் ஏற்பாடுகளைச் செய்திருந்தார்.

★ திருக்குடந்தைத் திருமுறை மன்றத்தின் 355 ஆவது தேவாரத் திருமுறை சிறப்பு இன்னிசை விழா 12-6-99 அன்று அருள்மிகு சோமேசர் திருக்கோயிலில் நடைபெற்றது. திருக்குவளை இரா. பார்த்தசாரதி திருமுறை இன்னிசை வழங்கினார்.

★ மதுரை தியாகராசர் கல்லூரி தமிழ்த்துறையின் சார்பில் 6-4-99 அன்று சைவ சித்தாந்தச் சொற்பொழிவு நடைபெற்றது. கல்லூரித் தலைவர் டாக்டர் திருமதி. இராதா தியாகராஜன் தலைமையில் டாக்டர் செ. ஈ. சூரியமூர்த்தி சிறப்புரை ஆற்றினார்,

★ செங்கோல் மடம் ஆதீனகர்த்தர் அவர்கள் செங்கோல் மடாலய சீடர்கள் சிலர் மற்றும் சைவ ஆதீன சீடர்குழு அங்கத்தினர் சிலர் ஆகியோருடன் 24-5-99 முதல் 26-5-99 வரை யாத்திரை மேற்கொண்டார்கள். மே24 அன்று திருப்பரங்குன்றம் ஒக்கலிகர் திருமண மண்டபத்தில் சீடர் குழுவினர் பூரண கும்ப மரியாதையுடன் வரவேற்று ஆசி பெற்றனர். பிற்பகலில் குன்றக்குடி மகாசந்நிதானம் அவர்களையும் 25, 26 தேதிகளில் திருவாவடுதுறை, தருமபுரம், சூரியனார் கோயில், வேளாக்குறிச்சி, நாச்சியார் கோயில் குருமகா சந்நிதானங்களையும், திருப்பனந்தாள் காசிமடம் அதிபர் எஜமான் சுவாமிகளையும் சந்தித்தார்கள். செங்கோல் ஆதீனத் திருமடாலயத் திருப்பணியில் சைவ மெய்யன்பர்கள் பங்குபெற உழவாரம் விண்ணப்பித்துக் கொள்கிறது.

---

பிரயாணம் புத்திசாலியை மேதாவியாக்கும். — பழமொழி

Regd. No : 004358 / 16 / 6 / AL / 85 / NT III dt : 26—9—85
UZHAVARAM (Monthly) Regd No. TN / MA HO 16/98
Licensed to Post Without Prepayment Under Licence No. 11/99
Posted at Madurai Bazaar Post Office on 16-6-99

உ
சிவமயம்
'என் கடன் பணிசெய்து கிடப்பதே'
உழவாரம்
ஆசிரியர் : சுடலைசுந்தரன்
துணை ஆசிரியர் : சிவ. பார்வதி B.Com. B.A.
மதுரைப் பன்னிரு திருமுறை மன்றத்திற்காக
வெளியிடுபவர்: C.S. சொக்கலிங்கம்
முகவரி : D. 89 பாரதியார் தெரு, டோர் நிர் 12, திருநகர், மதுரை – 6.
☎ 883086
அச்சு : அபிராமி அச்சகம், B-40 திருநகர், மதுரை–6. ☎ 883085

பெறுநர்
திரு N. திருநாவுக்கரசு
7/2 சர்ச் 4வது தெரு
T.T. நகர்,
அப்பர் அருளகம்,
காரைக்குடி
630002

புரவலர் கட்டணம் ரூ 1000/-
ஆயுள் சந்தா - ரூ. 250/- ஆண்டுச்சந்தா - ரூ. 25/-